தோரும் தேடி எடுத்து குவித்து தாமரபர்ணீ ப்ரவாஹத்தில் எறிந்தனர் அவற்றில "ஆராவமுதே," என பதிகமுள்ள ஒரு ஓலை மட்டும் எதிர்நீச்சலிட்டு ஒரு மஹானிடம் அகப்பட்டு திருக்குடந்தைக்கு வந்து சேர்ந்தது என்பது அந்த ஐதிஹ்யம்

நம் உலகம் இந்த துர்தசையில் இருக்க நாதமுனிகள் அவதரித்து பக்தியோகத்தால் பகவானை அடைய சக்தியில்லாத நமக்கு ப்ரபத்தி மார்க்கத்தை புன ப்ரதிஷ்டாபனம் செய்து கொடுத்தது நம் பாக்யமே

முன்னிருந்த சடமர்ஷண வம்சயர்கள் உக்ரமான தபஸ்ஸினாலேயும யோகப்ரபாவத்தாலேயும பகவானை அடைந்தார்கள் என்றும —

"कर्म ज्ञानमुपासनं च शरणव्रज्येति चावस्थितान्,
सन्मार्गान् अपवर्गसाधनविधौ सद्वारकाद्वारकान् ।
एकद्व्याकृतियोगसंभृतपृथग्भावानुभावान् इमान्
सम्यक्प्रेक्ष्य शरण्यसारथिगिरामन्ते रमन्ते बुधाः ॥"

என்கிறபடி நாதமுனிகளின் கருணையாலேயே நமக்கு ஸுலபமான ப்ரபத்தி மார்க்கம் கிடைத்திருக்கிறது என்றும கொள்ள வேண்டும்.

நாதமுனிகள், தம்பிதாவும சொட்டை குலத்தரசு என்ற ப்ரஸித்தருமான ஈசவரமுனிகளால் ப்ரஹ்மோபதேசம் பஞ்சஸம்ஸ்காரதிகள் செய்யப்பெற்றும் வேத வேதாந்த சாஸ்திரங்கள் அதிகரிக்கப்பெற்றும், யோக சாஸ்திர உபதேசத்தையும் பெற்ற பிறகு ஈச்வர முனிகள்

திருநாடு அலங்கரித்தபின, 200 வருஷங்கள் யோகத்தில் இருந்ததாகவும, பிறகு பகவந்நியமனத்தால், கிரஹஸ தாச்ரமத்தை அடையத்திருவுள்ளமாய, தபஹகாசிதமான தம திருமேனியை யோகப் பிரபாவத்தால் தாசநீயமாகச செயது, வஙகீபுரத்தாச்சியின குமாரத்தி அரவிந்தப பாவை யாரை விவாஹம செய்து கொணடாா எனறும், 216-வது திருநக்ஷத்திரத்தில், அதாவது கலி 3900-வது வருஷத்தில், ஒரு குமாரா அவதரிததாகவும் அவருக்குத் தம்பிதாவான, ஈசவரமுனி என்னும திருநாமத்தை இட்ட தாகவும பிறகு வடமதுரை, கோவாததனம் கோகுலம் முதலிய திவ்யதேசங்களில யமுனைத்துறைவனை ஸேவித்து, பிறகு மத்யே மார்க்கமுள்ள திவ்ய தேசஙகளை ஸேவித்துகொணடு திருமலை வந்து அப்பனைத் தொழுது அங்கு ஸவபூர்வர்களுடைய வாஸஸதானசரிதாதிகளைக் கேட்டு ஆனந்தித்து சில நாள் இருந்து அப்பன் நிய மனத்தால் வீரநாராயணபுரம் (காட்டு மனனூர்குடி) எழுந் தருளி மன்னனூரைஸேவித்து தான் நம்மாழவாரின் க்ருபையாலபெறற தமிழ் மறைகளை தாளம வழங்கி தேவ கான முறைப்படி தன் பாகினேயர்களுக்கு அப்யஸித்து வைத்து மன்னனூரின முனபாக பாடி வைத்தும மற்றும் திவய தேசஙகள் தோரும பாடி வரும்படி அவர்களை நிய மித்தும இனனும உயயகொணடார் முதலான சிஷயர் களுககு விசிஷடாத்வைத தர்சனத்தையும அதற்கு உப யுக்தாமசஙகளையும ப்ரபத்தி வித்யை விளம்பாக்ஷமாதி காரதயா (தாமதத்தை பொருக்க இயலாத்தனமையால்) தான் அனுஷ்டித்து மற்றவர்களையும் அனுஷ்டிபபித்தும் இப்படி பரவச்செய்தார்.

நாதமுனிகள் திருநாட்டுக்கு எழுநதருளினபோது அவருக்கு 342வது திருநக்ஷத்ரம அதாவது கலி 4026 சகம் 741 இன்னும் இவருடைய திவ்யசரிதம பல உண்டு.

இவவிதமாக பகாவான் தான யுகம்தோரும் என் நின்ற யோனியுமாய்ப்பிறந்தும் நமககாகப் படாதன பட்டும் ஷடமாஷண வம்சோத்தாரணத்தைப் பண்ணி அதில் ஸ்ரீ நாதமுனிகளை அவதரிபபித்தும் ஸம்ப்ரதாயத் திற்கே எட்டாமல் தவறிப்போன த்ரமிடோபநிஷததுக் களையும் ப்ரபததிசாஸத்ரத்தையும் புனருத்தாரணம் செய் வித்து கரந்த நிர்மாணங்களையும செய்வித்தும் விசிஷ்டாத் வைதத்தை தழைத்தோஙகுமபடி செயயாமல் இருக்க நேர்திருந்தால் நம தர்சனததின் தசை என்னவாகியிருக் கும் என்பதை நன்கு உணாந்து *தத் வஸ்து வாஸ்த்வா திகேஷு எனனும ந்யாயததால்க்ருதஜ்ஞதை கொள்ள ப்ராப்தம

நாதமுனி என்னும் ஜஞான ஒளி தோன்றாதிருந்தால் உலகமே இருளில்தான் மூழ்கிஇருககும நமமாழ்வாரின் பெருமையை உலகமறிந்தே இராது, நாதனுடையஜஞான ஒளியினின்றும யாமுன அவதாரத்தையும இப்ரதீபத்தி னின்றும் ஸ்ரீ சைலபூாணா என்கிற திருமலை நம்பியையும் இவர் ஸஹோதரி ஸ்ரீ தேவி மூலமாக பகவதராமானுஜரின் அவதாரபலன்களையும் பெறறோம

## யாமுன முனிவர் அவதாரம்
### (ஆளவந்தார்)

நாதமுனி தமக்கு தேஹாவஸானம் ஸமீபித்திருப் பதைப் பார்த்து ஸவசச்சரமார்ஜிதமான ஸம்ப்ரதாயஙகளை

---

"अशिथिलगुरुभक्तिस्तत्प्रशंसादिशीलः
प्रचुरबहुमतिस्तद्वस्तुवास्त्वादिकेषु ।
गुणवति विनियोक्तुं गोपयन् संप्रदायं
कृतविदनघवत्तिः किं न विन्देन्निधानम् ॥"

பித்ருதனமாக ரக்ஷித்து வ்ருத்தி செய்யும் விஷயததில் தன் குமாரரான ஈச்வரபட்டாழ்வான் பகதியோக நிஷடராய் ஸம்ஸாரவிமுகராய இருக்க மேறகண்டவைகளை நிர்வ ஹிக்கக் கூடிய பௌத்ரனுவது உதயமாக வேணுமென்று எம்பெருமானை ப்ரார்த்திக்க மன்னனுரின் அனுகரஹத் தால் தன் குமாரரான ஈச்வரமுனி என்னும் ஈச்வர பட்டாழ்வானுக்கு கலி 4017ல உத்தராட நக்ஷத்திரத்தில் ஒரு குமாரர் உதயமானுர்

பௌத்ரோதயததால ஸந்துஷடரான நாதமுனிகள் அவருககு யமுனைததுரைவர்,யாமுனர் எனறு திருநாமங் கள் சாத்தி தகுநத காலததில உபநயனம செயவித்து தாமே பரமமோபதேசம, பஞசஸமஸகாரஙகளையும செய் தருளி மூனறு வேதஙகளையும் பதக்ரமாதிஸஹிதம் சீக்ஷாத் யஙகளுடன் அதிகரிப்பித்து இன்னும் உபயுக்தாம்சங் களையும் நிரவசேஷமாக ஓதுவிதது ஸாஙகவரதஸமாவர்த் தனமும் முடிப்பித்து திருமந்த்ரங்களையும உபதேசம் செய்தருளினா

அனந்தரம் உருபபட்டூர் ஆச்சான குமாரர் அரு ளாளப பெருமாள் குமாரத்தி ஸ்ரீரஙகநாச்சியாரை ஆள வந்தாருக்கு 16வது வயதில் கன்னிகாதானம் செயவித்து ஸம்பரமமாகக் கல்யாணத்தையும் நடத்திவைத்தார.

பிறகு தன் சிஷ்யர்களான உயயகொண்டார் என னும் புண்டரீகாக்ஷரையும், குருகைக்காவலப்பனையும், மறற விசேஷாாத்தங்களையும் சரணுகதி சாஸத்ரத்தை யும் யோகரஹஸயத்தையும் தன் பௌத்ரனுக்கு ஆகாஙக்ஷை பிறநதபோது வருந்தியாவது ஆசார்யநிய மனம் என்று உபதேசிக்க நியமித்தருளினுர் அனந்தரம் ஸ்ரீ நாதமுனிகள் யோநிஷ்டரானுர்.

# ஆளவந்தார் வைபவம்

நாதமுனிகளின் பௌத்ரரான ஆளவந்தாரும் பால யம முதல்கொணடு அதிஸூக்ஷ்ம புத்திபடைத்தவராகவும சாஸத்ரங்களில் அத்விதீய பண்டிதராய் வாதத்தில் அஸஹாய சூரராகவும் மீமாமஸா பூர்வபாகமான கர்மகண்டத தில் பட்டா ப்ரபாகரா இவர்களின் இருஸித்தார்தங்களின கரைகண்டவராகவும ஸாவதந்த்ர ஸவதந்த்ரராகவும் ப்ரதிவாதிகளான யானைகளின பரகடாடோபங்களாகிர மத்தகத்தைப பிளபபதில திறமை உள்ள ஸிமமமாகவும இருநதார்

யமுனைத்துறைவருக்கு 19 வயது மஹாபாஷ்யபட்டரிடம் மீமாம்ஸாசாஸதரபரிசயம் பண்ணிவரும சமயம ஒருநாள் படடர் சோகித்திருக்க யாமுனா அதுகண்டு இதேது சோக காரணம? என்ன, பட்டரும் இந்த சோழ ராஜ்யத்தில ராஜாவிறகு ஆககியாழவான என்றெரு புரோஹிதர் உண்டு அவா ஸவயம்வித்வானுய் ராஜவலல பனுமாகையால ராஜா அறிய இத்தேசத்திலுள்ள வித வான்களிடமிருந்தெல்லாம பரதி ஸமவத்ஸரம் தசபந்தம், அதாவது கபபம் வாஙகி வருகிருர். கொடுக்கக்கையில இல்லை எனருல பரஸஙகம் பண்ணவேண்டி அழைப்பர்; அது ராக்ஷஸனேடு மலலுக்கட்டினூர்பபோலாகும் விபரீ தங்களைப்பேசும நம் ஏழைச் சொல் அம்பலமேருது, உமமுடைய வாரத்தைகளும பாலவ்யவஹார கோடியில் கூடிபபோம என்று பயபபட, யாமுனர் கிடக்கட்டும் இந்த யோசனை தேவரீா இஙகேயே ஸுகமாய் இருக்க வேணும் நான் ஏதாவது செய்கிறேன் என்று சொல்லி விட்டு ராஜதூதன கையில் இருந்த பத்ரத்தை வாங்கி

கிழிததெறிந்து ஒன்றும தருகிறதில்லை போ என இதை புரோஹிதா அறிந்து நிராகரிததவா ஒரு 'விதயார்த்தி' என்று தெரிய ராஜபடனை மறுபடி அனுப்பி இவா வெறும் கவியா? சாஸத்ரங்களில வல்லவரா? தநதர பாரங்கதரா? என்று கேட்டு வரச்செய்தாா

யமுனைத்துறைவாரும *'நவயம் கவயஸ்து கேவலம' எனறு ஒரு ச்லோகத்தை எழுதி அனுப்பி அருளினார். ஆககியாழவானும ராஜாவுககறிவித்து,ராஜாவும யமுனைத் துரைவரை வரும்படிசாஸனம் விடுவிக்க அந்த ராஜ சாஸனத்தையும் இவர் கிழிததுவிட அதை ராஜா கேட்டு கோபம கொள்ள, ராஜபத்நியும உமசாஸனத்தை மறுதத இவர் ஸாமான்யராய இரார் மஹாவித்வானய இருப் பார் புரஸகரித்து வரவழைத்தாலல்லாது வரமாடடார் என்ன, ராஜாவும் வித்வத்ஸபை மஹாநாடு கூட்டி வேண்டுமான ஏறபாடுகள செய்து கனதண்டிகை முத லான வரிசைகளை அனுபபி யமுனைத்துரைவரை அழைத்து வரவிட்டு ராஜாவும் பத்நீஸமேதராய முன்ன மேயே ஸபையில் வந்திருந்தாா

யாமுனரும் †'ஆசைலாதத்ரிகன்யா சரணகிஸலய' என்னும் ச்லோகத்தையே பிருதூதி வைத்து ராஜவீதி

---

* "न वयं कवयस्तु केवलं न वयं केवलतन्त्रपारगाः ।
अपि तु प्रतिवादिवारणप्रकटाटोप विपाटनक्षमाः ॥"

† "आ शैलादद्रिकन्याचरणकिसलयन्यासधन्योपकण्ठात्
आरक्षोनीतसीतामुखकमलसमुल्लासहेतोश्च सेतोः ।
आ च प्राच्यप्रतीच्यक्षितिधरयुगलादर्कसोमावतंसात्
मीमांसाशास्त्रयुग्मश्रमविमलमना मृग्यतां मादृशोऽन्यः ॥"

யாய வர ராஜாவும ராஜமஹிஷியும் வித்வான்களும் வர வேற்க யாமுனரும் ஸிமமகுட்டிபோல் அதிகம்பீரமாய் ஸகல மரியாதையுடன ஸபாமண்டபத்திலேறி வித்வதா ஸனத்தில் அமர்நதார ராஜாவும ராஜமஹிஷியும் அஞ் சலிபண்ண இவரும் ஆசீாவதித்து அருளிஞர்

அததருவாயில் ராஜமஹிஷியும இவருடைய ஸௌந் தாயத்தையும, விலக்ஷணங்களான மஹாபுருஷலக்ஷணங் களையும, வாதத்திலதைர்யத்தையும், ஸவரகாமபீர்யத் தையும், உக்திமாதுர்யத்தையும, யுகதிசாதுாயத்தையும் பார்த்தவுடனே ராஜாவை நோககி இவர் நம புரோஹி தரை ஜயிப்பார் இதில சங்தேகமிலலை எனன, ராஜா நம புரோகிதரே இவரை ஜெயிபபார் என்ன இபபடி இரு வருக்கும விவாதம வர, மஹிஷி, இவா ஜயித்தால என்ன கொடுபபீா எனன, ராஜா, எனககுள்ள ராஜயத்தில் அர்த் தம ஸமர்பபிககிறேன், இவா தோற்ருராகில நீ செய்வது என்னெனறு மஹிஷியுடன உறுதியிட்டுக கொண்டார்கள்.

யமுனைததுறைவர், ஸபை முனனிலையில் ராஜாவை நோக்கி, அழைத்த காரணம் கோர ராஜாவும் புரோகி தரை பாாகக புரோஹிதா "நம ஆணை தடடுமவா பிரசங் கததில ஜயிககுமவராயிருககவேணுமென அதற்கு "மத் யஸதர்கள பாாக்கிறே"னெனன, யாமுனர், 'பிரதிவாதியே மத்யஸதனுக அமையாதோ'' எனன, அவா, "உபய வாதி ஸமமதனனறோ மதயஸதனுவ''னெனன, யாமுனர், "பிரதிவாதி சம்மதிக்குமபடி சொனனுலமையாதோ, வேறு மத்யஸதன வேணுமோ''எனன, புரோகிதா, "அபபடியே ஆகட்டும" எனறு ஒபபுககொளள, யாமுனர், "லௌ கிகத்திலோ, வைதீகததிலோ பிரசங்கம?'' என்ன, புரோ கிதர், "லௌகிகததிலும பிரசஙகம உண்டோ'' எனன,

யாமுனா, "பரஸங்கமாவது பரஸபரவிஜிகிஷ‌ைதை யாகையாலே ஸர்வதர உணடாயிருககு'' மென்ன, ராஜா ஆகில், முந்தர லௌகிகத்தில நடக்கட்டும்'' என்ன, யாமுனர், "அதில மூன்று வார்தகை, ஐநது வாாத்தை, ஏழு வாாத்தைகளில உததம-மத்யம-அதம கிரமத்தில வ்யவஸதை செயது, ஜயாபஜயங்களில் பகுமாறுவ மானங்களும நிச்சயிகக வேணுமென்ன

புரோகிதர்,—'வென்றவன், தோற்றவன் தலையில் தாடனம் பண்ணுவது, அவனுடைய மரியாதைகளையும, ராஜா கொடுககுமவையெலலாம் கட்டிக்கொளவது,' என்ன யாமுனா, 'உபகரமிபபது யாா?' என்ன, புரோகிதர்,—'நீரே உபக்ரமிககிறது, நீர் லௌகிகத்தில் அலல வேனதை நான் ஆம எனக்கடவேன், ஆம என்றதை அல்லவேனக்கடவேன' என்ன, யமுனைத்துறைவர்,—'ஆகில் அயம் ராஜா ஸார்வபௌம' 'ராஜாபத்நீ பதிவிரதா', 'அவததயா ராஜ-மாதா ச, யதி-தோஷோ-அத்ர சிந்த்யதாம' என்றருளிச் செயதார் புரோகிதர், இதை 'அலல' வென்று சொலல முடியாமையால், பூமியை நோக்கித் தலையைக் குனிநதுகொண்டு நிருததராக வாளாவிருநதார்.

மஹிஷி நம புரோகிதர் தோற்றுர், எனறு ராஜாவின் தொடையைத் தட்ட, யமுனைத்துறைவர், 'புரோகிதரே மேல சொல்கிறீரோ? தோறறீரேமெனகிறீரோ வென்ன, புரோகிதா—ஸிததாநதத்தின் மேலே கக்ஷி சொலல, வல்லமையோ வென்ன, யமுனைத்துறைவா, நிர்வகிக்க வல்லவன் பிடிததேயன்றோ ஸித்தாநதமாகிரதென்ன, புரோகிதர், நீா இதை பூாவபக்ஷமாக்குவீரோ என்ன, யமுனைத் துறைவர்—நீர் இதில தோற்றீரேமென்று ஸபையறிய

சொனனீராகில், ஆகிறதென்ன, மஹிஷி, பெரியவர் வாயாலே சொல்ல நாஙகள் கேட்கிரேும, நானே சொல்கிறேன் அவா சொன்னபடிககு மேல் சொல்லவேணு மென்ன, புரோகிதரும் மேல்கண்டித்தீராகில இதில் நாம் தோற்ரேும என்ன, யமுனைத்துறைவரும்-ஆகில் கேளும் சபையோர்களே—இநத ராஜா ஸார்வபௌமன் அல்லன். ஸர்வா பூமி யஸ்யபோகே, யஸயவசேவா ஸ ஸார்வ பௌம, என்கிறவயுத்திபரகாரம் பார்ககுமிடத்தில இந்த சோழபூமி மாத்திரமே இநத ராஜாவுககு போக்யமாகவும் வசமாகவும் ஆகிறது ஸர்வபூமியும இபபடி ஆககக்காணு மையால் ஸாாவபௌமன என்னககூடுமோ?

'ராஜபத்னீபதிவ்ரதா' என்னவும் கூடாது *'ஸுப்தே ஸவபிதி யா நாரீ' எனறு தொடங்கி 'ஸாஸத்ரீஜ்ஞேயா பதிவரதா' என்கிற லக்ஷணம் புஷகலமாக இலலாமையா லும் த்ரிவித வயபிசாரங்களில் வாசிக-மானஸ வயபிசாரங் கள் உணடாயிருககை ஸமபாவிதமாகையாலும் †'ஸுந்த ரம் புருஷம தருஷட்வா' என்று தொடஙகும் த்ரௌபதி வாக்யத்திலுலும அறிநதுகொள்வது

அவந்த்யா ராஜமஹிஷீ என்னுமிடததிலும ‡'சுத்தா ஸா யா நஸூதே ஸத்ரீ காகவந்தயா ஸகருத்ப்ரஜா மருத

---

* "सुप्ते स्वपिति या नारी पूर्वमेव प्रबुध्यते ।
नान्यं कामयते चित्ते सा स्त्री ज्ञेया पतिव्रता ॥"

† "सुन्दरं पुरुषं दृष्ट्वा भ्रातरं पितरं सुतम् ।
योनिर्द्रवति नारीणां तथ्यं मे ब्रूहि केशव ॥"

‡ "शुद्धा सा या न सूते स्त्री काकवन्ध्या सकृत्प्रजा ।
मृतवन्ध्या मृतापत्या वन्ध्या लोके त्रिधा मता ॥"

வந்த்யா மருதாபத்யா வந்த்யாலோகே தரிதாமதா' என்கிற கணக்கிலே பார்க்குமிடத்தில் மஹாராஜா ஒருவரை மாத்திரம் பெறறு ஏகபுத்ரையாகையால ராஜமாதாவும வநதையை என்னக் குறையில்லை

ராஜாவும் இவர் சொன்னபடியே நிர்வகித்தார் என்று மஹிஷியை முதுகில் தட்ட, மஹிஷி—இபபோதாகிலும் இவர் மஹிமை அறியுமபடியாயிறறேவென்ன! ராஜா-யமுனைததுறைவா நமககு ஸதோத்ரமாகச் சொன்னதை புரோகிதா கணடித்தால் நமக்கு அபரியமாக விருக்குமென்று தூஷிக்க பயந்தவராக விருந்தாராகையால் புரோகிதர் இவருக்கு தாழ்நதிராா காண, என்ன, மஹிஷி—வாதத்தில் வந்தால் பிரிய அப்ரியங்களை நோக்கி இருகக அமையுமோ, வ்யவஹாரத்தில சொல் மறந்தால் ஜயம் வருமோ? இவரே நமககு ஸதோத்திரமாக உரைத்து தாமே அநயதாவாக கண்டித்த விடததில ஸந்தோஷியாமல் வயசனப்படுவது உண்டோ? 'நம் புரோஹிதர்' நம் புரோஹிதர்' என்ற நமமுடைய அபிமானச் சொல்லே அவருககு அதிசயத்தை ஏறிடுமோ வென்ன, ராஜாவும் மேல யோசனுபரனுகவிருகக, மஹிஷி—லௌகிக பிரசங்கத்தில் மூன்று வார்தைதயில்தானே இரண்டு தடவையும் தோறறவரை எடுத்துப் புகழ்வதும், சொன்னது கொடாம விருககவோ இந்த யோசனை,—இது அடுக்காது, சொல் படி செய்து விடும் என்ன, ராஜா புன்னகை கொண்டு, அதலல—என்மனோபாவம், நாம் தூஷணத்தில் நிற்கலாகுமோ என்றுா மஹிஷி—உள்ளது சொல்லில் தூஷணமோ, குருடனை செந்தாமரைக் கண்ணன் என்றால் அபபடி ஆவனோ, இவர் இல்லாதது சொலலுமவர் அல்ல ந்யாயம சாஸத்ரம் உள்ளபடி நிர்வஹித்தார் என்றுா

உடனே யமுனைததுறைவர் புரோஹிதரை நோக்கி, இதன் மேலாகிலும ஒரு தூஷணம் உரைக்கவல்லீரோ, என்ன, புரோஹிதர்—இதிலும தோறறேன் என்றார்.

யமுனைத்துறைவர்—ராஜாதூஷணத்தில் கிடக்க லாமோ என்று நினைபபதால் முதலில் சொன்ன ப்ரதிஜ்ஞையே ஸமாத்திககிறேன கேளீர், என்ன, புரோஹிதர் அபபடியே சொலல வேணுமென்றார் யமுனைத்துறைவா —ஸார்வபௌமசப்தம் இநத ராஜாவை சொல்லத் தட்டிலலை எஙகனேயேனில் —

ஸாாவபௌம சபதமும அதன பாயாயமான சகரவர்த்திப பதமும ஸாவபூமியையும ஆண்டு அனுபவித்து வந்த மஹீபதிகளான மாந்தாதா, ஹரிச்சந்த்ரன், நள மஹாராஜா, புருகுத்ஸர், புரூரவர், ஸகரர்; கார்த்தவீாயன், வஸு, பருது, தசரத சகரவர்த்தி, இவர்களிடம் முக்யமாய காண்கையாலும, இதர ராஜாக்களிடத்திலும இபபடி ப்ரயோகமிருப்பதால் 'கவசித்' ரூடமாயும, 'க்வசித' யோகமாயும், 'க்வசித' ஔபசாரிகமாயும் 'பகவாநிதி' சப்தமபோல் பூஜயோக்தி பரிபாஷையாக இருபபதாகக் கண்டுகொள்ளவேணும்

'ராஜபத்நீ பதிவ்ரதா' என்னுமிடத்திலும் 'ஸுப் தேஸவபிதி' என்கிற பதிவ்ரதாலக்ஷணம் நாயகானுகூல வ்ருதயாதிகளிலே குடிகொண்டிருக்கும், ஆகையால், பாதிவருத்யம பரிபூர்ணமாய் இருக்குமே. த்ரிவித வ்யபிசாரங்களில இந்த யுகத்தில் காயிக மாத்ரத்திற்கே தோஷமாகையால மற்ற விரண்டும் இருக்குமாகிலும் அது அகிஞ்சிதகரம இமமானஸ—வாசிகங்கள்கூட இல்லாமல் சிலருணடே தத்ஸூசகங்களான குண-சரிதங்கள் ப்ரகாசித்திருக்கையால ஒரு சங்கையும் வாராது ஆகை

யால் ஒரு குறையும சொல்லவிடமிலலேயே 'புருஷாணும் அபாவே' என்கிற த்ரௌபதி வாக்கியமும் 'பராயிகாபிப ப்ராயம் அநயதா, பிரபஞ்சம் நிஷபதிவ்ரதமாக ஸம்ப விக்கும ஆகையால் 'ராஜபத்நீ பதிவரதா' என்கிற நிர்வாகமும ஸர்வ ஸம்மதமே

'அவநத்யா ராஜாமாதா' எனறதறகு ஏகபுத்ரவதிக கும பஹுபுதரவதிககுமுளள பரலோகாதிகளில பேதமுண் டெனறு சொலலலாமாகையாலே நிர்வாகம காணலாம 'காகவந்த்யா' 'என்றதுவும்', ஏகபுதரவதி, 'பகுபுதரவதி' என்கிற குறையைப் பற்றிச் சொனனதத்தனை, போககி, நிந்தையாகச சொன்னதனறு ஆகையால் அவநத்யை என்றதுவும தப்பன்று

இபபடி ராஜா ஸார்வபௌமன் என்றும், ராஜபத்நீ பதிவிரதை என்றும், ராஜமாதா அவந்த்யை என்றும் ஸபா-ஸம்மதியாக நிர்வகித்தோம் இதன்மேல் ஆக்ஷேபிக் கும் வித்வானகள் உண்டாகில தூஷணம் சொல்லக் கடவா. அதையும் பரிகரிக்கிறோம—புருஷாயுஸ உள்ள மட்டும இதே பிரதிக்ஞை எனறார் தம்-புரோகிதா வைதிக பிரசஙகத்திலே பரிசயம உள்ளவராகையாலே நூதன மான இந்த லௌகீக வித்யாசாதுாயஙகள் அவருக்கும் கேட்டிருக்காமை நமமோடொத்ததே ஆயிற்று என்றார். யமுனைததுறைவர்-ஆயினும் அதுவும பாாக்கலாமெனன, மஹிஷி—அதுவும வேணுமோ ஓரொரு வெறறிக்கும் அர்த்த ராஜ்யம கொடுக்க பிரதிக்ஞை செய்து இரண்டு வெற்றிகளும் ராஜயம முழுக்க சென்றிருகக, மூன்றாம் வெற்றிக்கும மகாபலி ஸர்வேச்வரனுக்கு மூன்றும் அடிக்கு ஆத்மஸமர்ப்பணம் செய்தாற்போல் நமககு வந்திருக்கிறது எனறார் புரோகிதா உடனே இநத மகாபுருஷனுககு வெற்றியிலும் எனககுத் தோல்வியிலும

லஜ்ஜையுமில்லை ஸ்ரீராமனிடத்தில் பரசுராமர் பட்டது போல் பட்டேன் இது எனக்கு அனுக்ரஹமாகவே முடியும் என்று ச்லாகித்தார் யமுனைத்துறைவரும் ஸாமான்ய சாஸ்திரங்களிலே மூன்று நான்கு கட்டங்களை எடுத்து வித்வான்களுடைய த்ருப்தியே—பலமாக உபந்யஸித்து, மேலும் மீமாம்சா சாஸ்த்ரங்களிலே ஹிமவத்பர்வதம் தொடங்கி, நள ஸேதுபர்யந்தமும் உதயபர்வதம் முதல் அஸ்தமயபர்வதம் பர்யந்தமும் உள்ள இந்த பரப்பு நிலத்தில், என்னோடு பிரஸங்கிக்க வல்லவனாகிலும், அதவா கேட்டு அவகாசிக்க உண்டாகில, தேடிப்பார்க்கத் தக்கது என்னும் அர்த்தத்தைப் பிரகாசிப்பிக்கிற 'ஆசைலாத' என்று முன்பு பிருது கூறிய ச்லோகத்தையே பத்ராவலம்பம் பண்ணி அருளினார்

புரோகிதர் எழுந்திருந்து சமீபத்தில வந்து தலையை வணங்கி பிரதிக்ஞை தப்பாமல் செய்தருள வேண்டுமென்றார் யமுனைத்துறைவரும், ஹா ஹா! நீரே இப்படி பிரதிக்ஞை செய்தீர், நான் அதை ஒப்பவில்லை நீர் வித்யையில் பிரஸித்தராயும ஸர்வபூஜ்யராயும், ராஜ புரோகிதராயும வயோதிகராயும் இருந்து, இப்படி சொல்லி வரலாமோ? நமக்கு நிகர் ஒருவரும் இல்லை என்னும் வித்யா மதத்தினாலே தாமே பிரதிக்ஞை செய்து, அப்படியே ஸாத்வீகர்களையெல்லாம் அவமதித்து வந்தவராகையாலே என்னிடத்திலேயும் அப்படியே செய்ய தாமே பிரதிக்ஞை செய்தீர், பகவத் ஸங்கல்பம இப்படி ஆயிற்று. நான் அது செய்யேன் இனி இப்படி வித்வதவமதி ஆகாதென்றதுபோல சில மரியாதையான வார்த்தையை சொல்லி உபசரித்தருளினார்.

புரோகிதர் 'பரசுராமன் சக்ரவர்த்தித் திருமகனை கொண்டாடினாற்' போல் போற்றி, என்னை ரக்ஷித்து

விலக்ஷணமான கீர்த்தி பெறுவீரென்று, குறைகளெல்லாம் தமமிடம் ஏறிட்டுககொணடு மிகவும பவ்யராக இருநதாா

## ராஜ்யபோகம்

அங்குள்ள வித்வான்களுடனே ராஜானுமதியாலே இவரை பிரமமரதத்தில் எழுந்தருளவிதது தாங்களே ஸ்ரீபாதம்-தாங்கி ஸகலபிருதுகளுடனே ஊாவலம் செய் வித்து ராஜகிரஹகத்தில் எழுநதருளப் பணணிக கொணடு வர, ராஜா ஸநதோஷிகக, ராஜமஹிஷியும உளளடஙகாத ஹாஷப்ரகா ஷத்தினாலே வெளியே பெருகா நின்ற ஆனந்த ஸம்ப்ரம பரவசையாய எதிரே சென்று, 'என் ஸ்வாமி வந்தார்', 'என்னை ஆளவநதாா'. வந்தார், வந்தார் என்றும், கொணடாடி தன்னிரணடு கையாலும் குலமகனை அணைககுமாப போல வாரியணைததுக கொண்டு, பர்த்தாவுடனே, தம மணிமாட மாளிகைககுள் சிங்காஸனத்தில் எழுந்தருளப் பண்ண, ராஜாவும பத்நீயும் ஸ்வர்ண கலசத்தாலே குளிர்ந்த நீரிட்டு திருவடி விளககி புனிதமாகுமபடி தீாததம ஸவீகரித்து ஸர்வ ஆபரணங் களாலே அலங்கரித்து சத்ர-சாமராதிகளைக கொணடு பரிசாரகம பண்ணி மஹிஷீகர-ஸமர்பித ஸஹிரண்ய உதக-தாராபூர்வகமாக, புரோகிதர் மந்திரம் சொல்லி ஙவக்க தங்களுக்குள்ள ராஜ்யத்தில அர்த்தம ஸமர்பித்து 'ஆளவந்தார்' என்னும திருநாமம் சாத்தி ஸாவ மரியாதை வாத்யங்களுடன் சதுரந்த-யானருடராக எழுந்தருளப் பண்ணிக் கொண்டு போய் ராஜார்ஹமான ஒரு விடுதியிலே எழுந்தருளப் பண்ணி மேல் நடக்க வேண்டிய சட்டதிட்டங்களைச் செய்வித்து அனுமதி பெற்று தம் அரண்மனை சேர்ந்தார்கள். பிறகு மஹாபாஷ்ய பட்டரும் வந்து ஆளவந்தாரைக் கண்டு உகந்து என் ருணம் உம்மால் தீர்ந்தது என்று கொண்டாடிப் போனர்.

## போக விரக்தி

ஆளவந்தார் தம் திருத்தகப்பனருடைய சில ஸ்வ-பாவங்களையும தம் வம்சத்தினரின் ஞான பக்தி வைராக்யாதிகளையும் நினைத்து டோலாயமான ஹ்ருதயராய், இதுகளுக்கு விருத்தமாய ராஜபோகததை-நினைத்து, இதை நாமே கழித்துப் புகட்டிப்]போவோம் என்றெல்லாம் ஆலோசித்து, இப்படி பகுவிதமாக சிந்தாருடரானர். விடியறகாலையில் வந்திவைதாளிகர்கள், பரிஜனங்கள் பரா-போதிக ஸகல மங்கல வாத்யஙகளை கோஷிததாாகள். ஸூதமாகதர்கள் இவருடைய வம்சாவளியைக கொணடாடினாகள் வைணவ பரிசாரகர்கள் சுத்ததீாத்தங்களை ஸமர்ப்பித்து அனுஷடானம செயவித்தார்கள் இவரும் 'பராபதம பராபதம உபாஸீத' என்கிறபடி நீராடி அனுஷ்டானத்தை முடித்து, அனந்தரம ஏகாந்தமாக, இது எனன இபபடி ஈசவரன ஸங்கலபித்தான, நம் குடிப் பிறப்பிறகு இது ஒத்ததன்றே, எனற யோசனையில் ஒருவருடனும் பேசாமல மௌனமாய் எழுந்தருளியிருக்க, இச்செய்தி ராஜாவுக்குத் தெரிந்து ராஜாவும் பத்நீஸமேதராய புரோஹிதனை முன்னிட்டுக கொணடு இவர் திருமாளிகை முகப்பில் வந்து இறஙகி, ஏகாந்த ஸ்தலத்தில் எழுநதருளியிருககிற ஸ்ரீ ஆளவந்தாரைக் கண்டு தண்டம் ஸமர்மிதது இவருடைய திருஷ்டி-நிர்திஷ்டமான ஆஸனத்தில அமாநது பத்தாஞ்சலிபுடனய், இதென்ன? சிந்தா-நிமிததம? என்றெலலாம் ராஜா வினவ, இவா இந்த ராஜ போகஙகள் எனக்கு ருசிககவில்லை நம குடிபபிறப்பிறகும உசிதமானதன்று நம பூாவர்களை விரக்தர்களாய் பகவதபரர்களாய் பரமைகாந்திகளாய, யோக நிஷ்டாகளாய, தபஸசரண சீலாகளாயத திகழநதாாகள், இபபடி லோக விக்யாதமான திரு வமசத்திலே பிறத்து

நான் ராஜஸ-தாமஸ-வாத்தனமான இந்த ராஜ போகத்தில் இழிவேனே? ஆகையால இதுகளை ஒப்புக் கொணடு என்னை விடுதலை செயய வேணடுமெனருர் ராஜாவும புரோகிதரும போகாநுபவம் உணடானுல் அது பரம பதத்திறகு விலக்காகாதே ஜனக, அமபரீஷ, கேகயாதிகள் ராஜாக்களாயிருந்து ஸிதகி பெறறிலரோ? "நிவ்ருத்த-ராகஸய-கருஹம-தபோவனம" அன்ருே, தேவரீருக்கு தெரியாதது நாஙகள் எனன சொல்ல முடியும் என்ன, ஆளவநதார மௌனமாயிருக்க, ராஜா-ராஜயபார வஹனம், ஸவஹஸத-தருத-தணட ஆதபத்ரம் போல், அஸஹமாய இருக்குமாயின அடியேன இநத பாரத்தை வகிததுக கொளகிறேன எனறும் பருகருதி லபய-ஷட்-பாகத்ரவயாதிகளுக்காக பரதி தினமும நூறு பொன் காணிக்கையாக ஸமர்பிககினறேன் அதை திருவுள்ளம் பற்றியருளி பகவத்-பாகவத-ஆசார்ய கைஙகாயங்களையும க்ரந்தாவலோகந காலக்ஷேபாதிகளையும நடத்திக் கொண்டும அடியேனகளை அனுக்ரஹிததுக் கொண்டும இங்கேயே எழுநதருளியிருக்க வேண்டுமென பரார்த்திததார் ராஜமஹிஷியும் அப்படியே செயதருள வேண்டுமென்று திருவடிகளை பிடித்துக் கொள்ள புரோஹிதரும் இதை ரொம்பவும சலாகிக்க, ஆளவநதாருமு ராஜாவை முடிபிடிததெடுத்து அப்படியே உமது இஷடபடி நடத்தும என்று அனுக்ரஹித்து அவர்களுக்கு விடைகொடுத்தனுபபினுர

பிறகு ராஜாவைக்கொணடு வீரநாராயணபுரத்தில் நின்றும் திருத்தாயார் தேவிகள் மற்றுமுள்ள பந்துக்களையும் வரவழித்து கங்கைகொண்டானுக்கு மேற்காக குறுக்கைக் காவலப்பன் கோவிலுக்கு தெற்காக ஒரு வஸதி செயவித்து அதில் எழுநதருளியிருநது ராஜ ஸமாப்பண

த்ரவயஙகளைக் கொணடு பகவத்-பாகவத-ஆசாாய கைங் கர்யங்களை நடததி ஸு"கோததரராக எழுந்தருளியிருந் தார்

ப்ரரத காலானுஷடானததிறகு அர்த்தயோஜனை தூரத்திலுள்ள திருககாவேரிக்கு ப்ராமஹ முஹூர்த்தத் தில ஆந்தோளியில புறபபட்டு எழுநதருளி உதயோபஸ் தானம் செயது சூாயோதயமாகி ஒரு கடிகைககுள்ளே திருமாளிகைக்கு எழுந்தருளி ஒளபாஸநாதி அனுஷ்டா னங்களையும் அபிகமனபூர்ததியையும் செயது குருகைக் காவலபபனை தணடம ஸமாபபித்து காலக்ஷேபஙகளையும் கடாக்ஷிததருளினா மாத்யான்னிக ஸநாநார்த்தமாக அங்கு ஒரு ஊரணி வெட்டிவிதது அதில் அனுஷ்டானம் செய்தருளி வெணணைகது ஆடிய கிருஷ்ணன முதலாண எமபெருமான்களை இஜயையில ஆராதிதது அதிதி அப்யா கதர்களை அமுதுசெயவித்து தாமும அனுயாகம முடித்து ஸாயம் ஸவாதயாயாதி யோகாநதமாக அசசித்ர பஞ்ச காலபரராய எழுததருளியிருநதாா

மஹாபாஷ்யபட்டரும இஙகேயே நியதமாக வஸித் துக்கொணடு இவருககு மீமாமஸா சிநதனை சாந்தி செய் தார்

இப்படி சில நாள சென்றவாறே ராஜபுரோஹிதா வந்து தண்டமஸமாபித்து அடியேன இததனை நாளாக உணமை உணராமல் இருநதேன் தேவரீர் எழுந்தருளினது முதல் நற்றெளிவு உணடாயிறறு அடியேனை ஸ்ரீவைஷ்ணவ தர்மநிஷ்டனாகச் செயது அடிமைகொண்டு அருளவேணு மென்று பராாததிகக, ஸ்ரீஆளவந்தாரும் இவருடைய சீலவருததாதிகளால் சுததர் எனறு திருவுள்ளம பறறி அவருககு பஞசஸமஸகாரங்களை செயது, திருமநதரததை

உபதேசித்து நாதமுனி—தாஸர் என்று தாஸ்ய - நாமம் சாற்றி, பரமைகாந்தியாய் இரும், என்று அநுக்ரஹித்தார்.

இச்செய்தியை ராஜாவும் ராஜமஹிஷியும் அறிந்து, வந்து தண்டம் ஸமர்ப்பித்து, ஆட்கொண்டு அருளவேண்டும் என்று ஆளவந்தாரை பிரார்த்திக்க, அவ்விருவருக்கும் பஞ்சஸம்ஸ்காரம் செய்தருளி ராஜாவுக்கு ஸ்ரீரங்கநாத-தாஸர் என்றும், ராஜமஹிஷிக்கு திருவரங்கத்தம்மை என்றும் தாஸ்யநாமமிட்டு ஸ்ரீ வைஷ்ணவ—தர்மங்களை உபதேசித்து ஸ்ரீவைஷ்ணவ அக்ரேஸரர்களாகச் செய்தருளினார் அவர்களும் பதேபதே வந்து தண்டனிட்டு விசேஷார்த்தக்ரஹணம் பண்ணிக்கொண்டிருந்தார்கள்.

## குருவே தேடிய சீடர்!

முன்பு, ஸ்ரீமந் நாதமுனிகளால் தம் திருப்பேரனை யமுனைத்துறைவருக்கு ஆகாங்க்ஷை பிறந்தபோது ப்ரபத்தி சாஸ்திரத்தை உபதேசிக்கும்படி நியமிக்கப்பட்ட அவருடைய சிஷ்யரான உய்யக்கொண்டார் எனும் புண்டரீகாக்ஷரும் அப்படிச் செய்ய பல தடவை அவர் இருக்குமிடம் போயும் அலப்த—மனோரதராய், திரும்பி கோயிலுக்கு எழுந்தருளினார் பின்பு தமக்கு பரமபத-நாத ஸேவை நெருங்கி இருப்பதை அறிந்து தம் சிஷ்யரில் பிரதானரான மணக்கால் நம்பி எனும் ராமமிச்ரரை அழைத்து, 'நீரே வருந்தியாவது அவருக்கு இதை உபதேசியும்' என்று நியமித்து திருநாடு அலங்கரித்தருளினார்

மணக்கால் நம்பியும், சோழமண்டலம் எழுந்தருளி குருகைக்காவல் நாதனை ஸேவித்து ஸ்ரீ ஆளவந்தார் திருமாளிகை, கட்டும் காவலுமாய், இருந்தபடியால் இப்படி நான்கு தடவையாய், ஐந்தாவது தடவை சென்று

உஞ்சவ்ருத்தி பிராமஹணர்களோடு அவர் திருமாளி கைக்கு உள்ளேபோய் திருமடப்பள்ளி கைங்கர்யபாரை பரிசயம பண்ணிக கொணடு, ஸ்ரீ ஆளவந்தார் விரும்பி அமுது செயயுமது, தூதுவளைக கீரை என்றறிநது, இது ஒரு நலவழி என்று, தினமும் தூதுவளை பறிதது, பரிசாரகர் களிடம கொடுத்து நன்ருகப் பாகம செய்து ஸ்ரீ ஆளவந்தா ருக்கு பரிமாறுஙகள் எனறு ஆறு மாஸகாலம் கொடுத்து வந்தாா ஒரு கேள்வியும இல்லாமலிருகக இவர், ஒரு நாள் தவிர்த்துப் பாாப்போம, என்றிருகக, அன்று, ஸ்ரீ ஆளவநதார் அமுது செய்தருளும்போது தூதுவளையில்லை யோவென, பரிசாரகர், ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் ஆறுமாஸ மாக தப்பாமல் பிரதிதினமும தூதுவளை கொண்டு வந்து கொடுததுப் போவா, இனறு அவா வரவிலலையென, ஆளவநதாரும ஆச்சர்யபபட்டு, "நாளை அவர் வந்தக் கால் அவரை நமககு வரககாட்டுங்கள்" என்று அருளிச் செயதாா

மறுநாள் மணக்கால் நம்பி கீரையுடன் ஆளவந்தார் திருமாளிகை சேர, பரிசாரகர் இவரை வரவேற்றி, ஸ்ரீ ஆளவந்தாரிடம் அழைத்துப்போக, ஸ்ரீ ஆளவநதாரும் 'வைஷணவோ வைஷ்ணவம் த்ருஷ்ட்வா-தண்டவத் ப்ரணமேத்பூவி' என்றபடியே புரஸகாரஙகளுடன் ஆஸனத்தில எழுந்தருளப பணணினுர் ஸவாமி திரு நாமத்தையும் ஸ்ரீமந நாதமுனிகள் திருவடி சமமந்தம் பெறறவா என்றும், அவருடைய நியமனத்தால் வந்திருககிருர் என்றும அறிந்தார் மணககால நமபி, "உம்முடைய பிதாமகா ஒரு நதியை கண்டு அனுபவிதது வைத்து, அதை உமக்கு காட்டிக கொடுககும்படி நிய மித்து போந்தருளினுர். அதற்காகவே பல தடவைகள் வந்து உம்முடைய க்ருகம கட்டுங்காவலுமாய் இருககை

யால் உம்முடைய தரிசனம் கிட்ட பசசையிட்டேன். இதே வந்த காரியம்''.

ஆளவந்தார மேலும் விவரங்கள் வினவ, ''அம் மகா நிதி ஈராற்று நடுவிலிருக்கிறது, ஒரு-ஐநது-தலை-நாகம் சுற்றிக்கொண்டிருக்கிறது அதை ஒரு ராக்ஷஸன் கவர்ந்துகொணடுபோக வநது போய் கொணடிருககிறுன் இங்கிருந்து மேறகாக ஐந்து யோசனை தூரத்திலிருககிற தென்றும உம் பிதாமஹர் சொல்லி வைத்திருககிற ஒரு மந்த்ரத்திறுல் பாமபும ராக்ஷசனும் அநுகூலராவார-நிதி யைபபெறலாம்

அந்நிதியானது கண்ணுலே பார்த்த மாத்திரத்தி லேயே ஸகல-புருஷார்த்த-ப்ரதமென்ன, ஆளவந்தார், அம்மந்திரத்தை சீககிரத்தில் உபதேசிப்பார்களோ என்ன; மணக்கால்நம்பி—உமக்கு உபதேசிக்கைக் காகவே எனக்கு உபதேசித்திருககிறுர்கள், உம்முடைய பித்ரு-தன-ப்ராபகமான மந்த்ரத்தை உமககு உபதேசிகக ஒரு நியமமும் வேண்டுவதில்லை என்ன, ஆளவநதார், அது எபபோதென்ன, மணககாலநமபி—நீர கோரின போதே என்ன, ஆளவநதார்—நாளை உதயததில காவே ரிக்கு ஸ்ரீபாத தீர்த்தம் சேர்த்துககொள்ள விடை கொள்ளு வதாயும அவவிடத்திலேயே கிருபை செயதருள வேணு மென்று பிரார்த்தித்து தண்டம் ஸமர்பபிகக, அப்படியே என்று மணககால நமபி ஸாதித்து, சாயங்காலமே புறப் பட்டு திருக்காவேரி தீரத்தில சென்று ராத்திரி அங்கு இருந்தார்

காலையில் ஸ்ரீ மணக்காலநம்பி தீர்த்தக்கட்டத்தில் நீராடி அனுஷ்டாங்களைச செயதிருந்தார் ஆளவநதாரும

வழககப்படி சிபிகையில் எழுந்தருளி, காவேரியில் நீராடி அநுஷ்டானங்களை முடித்துககொண்டு மணக்கால் நம்பியை தர்சித்து மநதரோபதேசம் செய்தருள வேண் டும் என்று பரார்ததிகக, நம்பியும குருபரம்பரோபதேச—பூர்வகமாய் தவயத்தை உபதேசித்தருளினார். ஆளவந் தாரும, ஸ்வகதமாக, மந்த்ரவிசாரம பண்ணி, நாம் அர்த்த பரர்களோடு வஸிக்கையாலே நம்மை நாராயணபரா ளோடு சோக்க திருவுளளமபறறி எமபெருமானே விபர-ரூபியாய வநதிருபபதாகக் காண்கிறோம் மேலும் பார்ப் போம் எனறு இபபடி சிநதை கொள்ள, மணககால்நமபி—பகவத்பரமான இமமநதரமே, அந்நிதியை ஸக்ஷாத் கரிப பிககும என்றா எபபோது நிதி ஸதலம சேருவது என்று இருவரும் யோசிகக, ஆளவந்தார் தான நாளைகசே ராஜாவுக்குச சொல்லிககொண்டு புறபபடுகிறேனென்றார். மணக்கால்நமபி—ஒரு காரியார்ததம் என்று மாத்திரமே சொல்லிப் புறபபடுவது உசிதம எனறும், தான் முன னேயே கிளம்பி மத்யமாராககமிருபபதாயும, பரிமித ஜனத் தோடு வநதால் போரும என்றும சாதித்தருளினார்

ஆளவந்தாரும் திருமாளிகைககு எழுந்தருளி ராஜாவை வரசசெயது, “தாம காரியார்ததமாகக் கொஞ்ச தூரம் போயவர வேணடியிருக்கிறது, இங்கு எல்லாவற றையும முறைபபடி பாரதுவாரும்” என்று அருளிச் செயய, ராஜாவும், ‘சீககிரமாக எழுநதருளுகிறது’ என்று விண்ணபபம் செய்து, பிரயாணத்துககு வேணடியவை களையும் திட்டம் செயதார

ஆளவநதார மறுநாள காலையில் பரிமிதபரிஜன பரிச் சதத்தோடு பிரயாணமாகி சிபிகாரூடராய், நமபிக்கும ரு சிபிகை கொண்டு கொஞச தூரத்தில் நமபியைக

கண்டு அவரையும் சிபிகாருடராய்ச செய்து. இரண்டு மூன்று நாள் மார்க்கத்தில் வஸித்து தமக்கு, ஷஷ்ட்டியப்த பூர்த்தி தினமாகிய, தாது வருஷம் ஆடி மாதம உத்திராட நக்ஷத்திரத்தன்று கோயில் சேர்ந்து திருக்காவேரியில் நீராடி அநுஷ்டானங்களை முடித்து ரங்கவாஸிகளும் பரி ஜனங்களும் எதிர்வந்து உபசரிக்க இருவரும் பாதசாரு களாய் மங்கள-வீதி வலமாக நம்பி முன்னும ஆளவந்தார் பின்னுமாக ஸேவாக்ரமமாக ஸந்நிதியில் புக்கு நிற்க, நம்பி யும் பெரிய பெருமாளை ஆபாதசூடம் சேவிக்கப் பணணி வைத்து பெரிய பெருமாள் திருவடிகளைக காண்பித்து இதுதான் உம்முடைய பித்ருதனம் பெரியோர்கள் தேடி சேமித்து வைத்தது, ஈராற்று நடுவுளென்றேமே அது உபய காவேரி மத்யம், பாம்பு சுற்றி இருப்பது, இது சேஷதல்பம், ராக்ஷஸன் விருமபுகிறனென்றேமே, அது ஸ்ரீ விபீஷ்ணாழ்வான் வேண்டப்பாடு இவரை சேவிததுக் கொண்டும ஸந்நிதி காரியங்களை ஆராயந்து கொண்டும் உம்முடைய பிதாமஹரால் பிரதம-திருஷடமாய்—ப்ரவர்த் திதமான, வசிஷ்டாத்வைதத்தை, தாயம்போலே, பாது காத்து, பரவசனம பண்ணிக் கொண்டும் ஸுகோத்தர ராய், ''அத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ''—என்று அரு ளிச் செயதார்

## ஸ்ரீ ரங்கவாஸம்

ஸ்ரீ ஆளவந்தாரும் பெரிய பெருமாளை ஸேவித்து 'பழுதே பலகாலம போயின' என்று அஞ்சி அழுதே, அரவணைமேற்கண்டு தொழுதேனே, ''என்கிறபடியே, கண்ணும் கண்ணீருமாய்க் கண்டு அநுபவித்து அவ்வனு பவஜநித ப்ரீதியாலே வாயார வாழ்த்தி நிற்க, பெருமாளும் உகந்து வரிசைகளை பிரஸாதித்தார் பிறகு ஸ்தானத்தார்

வந்து யதாயோக்யம ஸேவித்து நிறக, அவர்களை கடாக்ஷித்து அநுக்ரஹித்து ஸகல—பரிவாரங்களுடன் ஒரு விடுதியில எழுந்தருளி வநதவர்களை அனுபபி, நமபியும் ஸ்வகருஹம ஏக, அவரைப் பின் சென்று விடை கொணடு, தம நித்யகர்மானுஷ்டானங்களைச செய்து வந்தார்

மறுநாள் காலையில நம்பி எழுந்தருளி ஆளவந்தாரை குசல பிரச்னம பண்ணி, உம்முடைய பிதாமஹர் நாத முனிகள,

''பக்த்யா பரமயா வாபி பரபதயாவா மஹாமதே |
பராப்யோsஹம நான்யதாபராப்யோ மமகஙகர்ய
லிப்ஸயா''

எனறு விகல்பித்து விதிதத மோக்ஷோபாயங்கள் இரண்டில பக்தியோகம தமககு குலகரமமாய பிராப்தமாக, ப்ரபத்தியோகததை நம்மாழ்வாரிடத்தில் பெற்று இவை இரணடையும் உமக்கு உபதேசிக்க வேணும் என்று குருகைக காவலபபனை பக்தியை உபதேசிககுமபடிக்கும், நம ஆசார்யரான—உயயக்கொண்டாரை பரபததியை உபதேசிககுமபடிக்கும நியமித்தருளினார் உய்யக் கொண்டாரும அலபத-மனோரதராய் அதறகு அடியேனை நியமிததுவிட்டுத திருநாடு அலஙகரித்துவிட்டார், அடியேனும மூன்று நான்கு தடவை வந்து கடைசியாய்க் கணடு, இவ்வளவாக முடிந்தது இதைப பெறறுககொள்ளும என்று சரணாகதிசாஸ்திரத்தையும் உபதேசித்து இந்த சாஸதிரம் குருமுகமாக வரவேணும் என்றும அதற்காகவே இபபடி உபதேசம் எனறும், ஆதலால ப்ரபத்தியை அநுஷ்டித்தும், அநுஷ்டிபபித்தும் போறும் என்றார். மேலும் இநத ஸிததாந்தததுககு உபயோகியான

ஆழ்வார ஸ்ரீ ஸூக்திகளான திவ்யப் பிரபந்தங்கள் நாலா யிரத்தையும ஓர் உரு அருளிச்செய்து, மற்றும் ஸூத்ர-ததர்தஙகளேயும, நல்வார்த்தைகளேயும் உபதேசித்து ஸித்தாநத—நிர்ததாரண—ஸார்வபௌமராக்கி கிருதார்த்த ரானுர்.

ஸ்ரீ ஆளவநதாரும அவைகளேபபெற்று ஆனந்தத்தாலே, எங்கேயோ ஒரு மூலேயில கிடந்த அடியேனே இவவளவு வருந்தித திருத்தின தேவரீருககு பிரத்யுபகாரம் இல்லாமையாலே நித்யருணி ஆனேன என்று தண்டம ஸமாப்பிததார் மணக்காலநமபியும் நீா இபபடி அனுஸநதிபபது உமக்கு ஸவரூபம, ஆசார்ய நியமனம் நிறைவேறறுவதும் ஆசாரய புத்ர-பௌத்ராதிகளில் பரீதி பண்ணுவதும அடுயேனுக்கு ஸவரூபம் என்று இருவரும் ஸம்பாஷித்துக்கொண்டு போநதார்கள் ஆளவந்தாருககு நாளுககுநாள் ஆகிஞ்சிணயாதிகள் மேவிட்டு வருவதை நம்பி கண்டு, உமககு ஆர்த்தி மிகுமாகில, பெரிய பெருமாள பககல் சரணுகதி செய்யும் என்று சொல்லி, தத்-ப்ரகாரங்களேயும் உபதேசித்தார் ஆளவந்தாரும பெரிய பெருமானே தண்டம் ஸமர்பபித்து புருஷகார பரபத்தியால பரஸனனேயான பெரிய பிராட்டியார் முன்னிலேயில் பெரிய பெருமாள் திருவடிகளில அஙகபஞ்சக ஸமபன்னமாய் ஸவரூப-பல-ஸமாபபண கர்ப்பமாக பர ஸமர்ப்பணத்தைச் செயதார. பின்னும் அறிந்து அனுஷ்டிக்கும்படிக்கு ஸ்ரீப்ரபதனமான சதுச்லோகியையும் பகவத்ப்ரபதனமான ஸதோத்ர ரத்னத்தையும, ஆக மப்ராமாண்யம், கீதாாத்தஸஙக்ரஹமும் ஸித்தித்ரயம் (8) புருஷ நிர்ணயம் ஆக எடடு மூல க்ரந்தங்களேயும் அருளிச் செய்து ஜகத்தை வாழவித்தருளினுர். இவை எல்லாம் மணக்கால் நம்பி உகந்தருளினுர.

# பக்தர் குழாம்

இவ்வதிசயங்களையெல்லாம சோழ ராஜா முதலா ன்னோர் கேட்டு சந்தோஷித்து நாமும் போய் ஆசார்ய-பகவத்ஸானனிதயத்தை அடைய வேணுமென்று பேரவா கொண்டிருந்தாகள் இப்படி இரண்டு வருஷம சென்ற வாறே திருத்தாயாா, தேவி, குமாரர்களும் கோயில் வந்து ஆளவந்தார் ஸனனிதானம் சேர்நதார்கள்

பிறகு ராஜா, தன மஹிஷி, புரோஹிதர், இவர்கள் தாம எதிாபார்த்தபடி ஆசார்யர் ஸ்ரீரஙகத்திலிருந்து திருமபி கங்கைகொணடானுககு ஏள்ளாமலிருநதாலும கோயில் சென்ற அவர் குமாராகளும திரும்பி ஏள்ளாம லிருந்தாலும் ராஜயதழை தனகுமாரர் வசமாககி பரயாண மாகி இவர்களெலலோரும பரிமித-பரிஜன-பரிச்சதாதி களோடு யாஞருடாகளாய ஸ்ரீரஙகம பெரிய பெருமாள் அடிவாரம் சோந்து, ஆளவநதாரை தணடம ஸமர்ப பித்து நின்றுர்கள் புரோகிதா ராஜாவின எணணதழை விண்ணபபம செயய, ஆளவந்தாரரும், எம்பெருமான், உம்மை இனித் தவறவிடுவதில்லை—ராஜயதழை குமார னுக்கு பட்டம் கட்டி, நீஙகள் நமமுடையவர்களையும் கூட்டிக்கொண்டு எலலோருமாய்ச் சோநது வாருங்கள், எனககு இது மிகவும பரியமே, எல்லோரும் போய் சோந்து வாருங்கள் எனறு அருளிச்செயய, அரசரும் அப்படியே ராஜயம சேர்ந்து, மந்த்ரிகளோடு யோசனை பண்ணி, சுப முகூர்த்தத்தில குமாரனுக்கு பட்டம் கட்டி, பரக்ருதிகளிடம் ஒப்பித்து கொஞசநாள் இருந்து, புத்ரா தீன-ராஜய பாரத்தைக்கணடு நிச்சிநதஞயபிள்ளை அரசு நமபிதிருவரஙகநயிஞர்எனகிற—ஆசார்ய புதரராகளையும் ஸகும்படும்பராய எழுநதருளிவித்துககொணடு,ஸபத்னீகர ரான புரோஹிதருடனும் ஸ்ரீரஙகம்வந்து சேநது, தனியாக

ஒரு விடுதியில் அமர்ந்து, ஆசாரியர் திருவடிகளிலே தண்டம் ஸமர்ப்பித்து, திரவியங்களை ஆசார்ய நியமனப் படி கோவிலுக்கும், பாகவதர்களுக்கும், ஆசார்யாம சதகை திருமாளிகைக்கும யதார்ஹமாக வினியோகித்து, யதாதிகாரம ரகஸ்யாதி—பரிசயமும கைங்கர்யங்களும் செயதுகொண்டு குருகுல வாஸம பண்ணிகொண்டு ஸ்ரீகோததரராய் இருநதார் புரோகிதரும் ஸகுடும்பராய நித்யகாமானுஷ்டானங்களுடனே ஸந்நிதியில் காத் திருந்து காலக்ஷேபத்திலே அன் வயித்துக்ருதார்த்தரா

ஸ்ரீநாதமுனிகள் தமக்கு குலகரமமாய் ப்ராப்தமான பக்தியோக ரஹஸ்யததை உபதேசிக்கத் தம சிஷ்யரான உய்யகொண்டாரை தேடிக்கண்டும அவரும் தேஹாவ ஸானம நிரீக்ஷித்துத் தவறுமபடி ஆச்சுது இந்த ரஹஸ்யத்தை ஸ்ரீநாதமுனிகள ஸ்ரீஆளவந்தாருக்கு உபதேசிக்குமபடி குருகைக் காவலபபனுகது நியமித் திருந்தபடி ஆளவந்தார் அவரை அணுகி பரார்த்தித்து தண்டனிட அவரும் அதிப்ரீதராய ஆளவநதாரை முடி பிடிதெடுத்து மடியிலிருக்கச செயது ஆலிங்கனம் பண்ணி உச்சி முகர்ந்து நம ஈச்வர முனி பிள்ளாய் வாகும் இப்போது நம் ஆசார்யனான ஸ்ரீமந நாத முனிகளையும நம ஸதீாததரண ஈசவர முனிகளையும் கண்டாபபோல் ஆயிற்று உமக்கு உபதேசிககைக் காகவே உமமுடைய பாட்டனார் எனக்கு உபதேசித் தருளினார் தாயமபோல் ஸவத ப்ராப்தமானதை உபதேசிக்கத் தட்டேன்? ஆனால் நம் சரீராவஸானத்தில் சொல்லுகிறோம் என்று மாஸம், திவஸம், முஹூர்த்தம் குறிப்பிட்டு எழுதிக்கொடுத்து விடை ஸாதித்தருளினார்.

ஆளவந்தாரும் திருமபி கோயிலேற எழுநதருளி பிறகு திருவனந்தபுரம எழுந்தருளி அனந்தபத்மநாபப

பெருமாள் ஸேவா யாதரை நடுவில தவிரி குறித்தநாள் அன்றேயானதால ஒரு புஷபக விமானம இல்லையே என்று வருந்தி சோகிக்கலாயிற்று.

## புத்ரஸம்பத்து

கலி 4017-வது வருஷததில 916 கி பி அவதரித்த ஸ்ரீமதயாமுன முனிகளுககு 16 வயதில கலி 1033ல தன பிதரமஹன் நாதமுனிகளால ஏறகனவே விவரிததிருக்கிற படி கலியாணம் செயது வைக்கபபட்டது ஆளவநதார் தன்னுடைய 19வது வயதில வித்வஜஜேதா எனகிற கீரத்தியையும் பாதி சோழ ராஜயத்தையும் சனமானமாகப பெறறார் *அவருக்கு 31 வயதில முதல குமாரர் சொட்டை

---

*ஆயிரம வருஷஙகளுககுமேல பட்ட அஸநநிஹித காலமாகையால ஆளவநதார் வமசத தொடர்ச்சியைப பறறி ஆராயசசிககாரர்களின் நிர்ணய பேதம இவவாறு

1 ஸ்ரீநிகமாநத தேசிகன் குருபரமபராஸாரததில "ஆளவநதார் பிள்ளை சொட்டைநம்பி" என்று ஸாதித் திருககிறா

2 சுமார் 70 வருஷஙகளுககுமுன் பத்யரூபமாகத் தொகுக்கபபட்ட பரபனனும்ருதம் என்கிற க்ரநதத்தில 'ஆளவநதார் விஜயத்தில "புதரத்வயம் ததா ஜஜஞே யாமுனார்யஸய விச்ருதம், வராஙகாபிதோஜயேஷ்ட சோட்டைபூர்ணோ பரஸ்தயோ | என்று யாமுனார்யருககு இரண்டு பிள்ளை என்று இருககிறது

3 பெரிய திருமுடி அடைவு என்னும பழைய கரந் ததில் யாமுனார்யருக்கு பேருடன் நான்கு குமாரர்கள என்று குறிக்கபபட்டிருக்கிறது

4 ஸ்ரீவைஷணவாசாாயகால நிாணய விஷயமான- The Local Records of Brown-in Madras Government Records Office, Vol 60, pp 506-509, under serial No 150, இதனபடி ஆளவந்தாருககு நான்கு குமாராகள் என்று போகளுடன உறுதிபபடுததபபட்டிருககிறது இது இந்நூலுககு ஒத்திருககிறது

நம்பியும 33வது வயதில இரணடாவது குமாரர் தைய்வத் திறகு அரசு நமபியும 39வது வயதில மூன்ருவது குமாராபிள்ளை அரசுநம்பியும, 41வது வயதில நானகாவது குமாரர் ரஙகராஜன் என்கிற திருவரங்க நயினரும் அவ தரித்தார்கள்

உசித காலத்தில் உபநயனுதிகளைச் செய்து இவர் கட்கு வேத வேதாந்தஙகளையும் ஸ்ரீயாமுன முனிகள் அத்யயனம செய்து வைத்தார் ஸ்ரீ ஆளவந்தார மஹிமையையும் இந நான்கு குமாரர்களின் ஒப்பறற மஹி மாதிசயததையும் பார்தது ஸ்ரீ ஆளவந்தார ஸன்னதியில ஸ்ரீ மணக்கால் நமபி என்கிற ராமமிச்ரர் இபபடி உல்லே கனம் செய்தார் —"இருபுறமும சூழந்திருக்கும திருக் காவேரியே-ஸரயூநதி, ஸ்ரீ ரங்கமே திருவயோத்தி, இவ் வூருக்கும் அவவூருக்கும பெருமாள் ரங்கபதி ஒருவரே, திருவம்சம இரண்டிடத்திலும் ஏக ரூபமாகவே ப்ரஸித்தம, யமுனைத்துறைவரை சக்கரவர்த்தியாயும், அவர் குமாரர்கள் நாலவருமே சக்கரவர்த்தி, திருக்குமாரர் களாயும், இப்படி திரும்ப ஓர் அவதாரம் ஸங்கல் பித்தா னிறே, ஸர்வேச்வரனேன்ன," இதைக் கேட்ட அங்குள்ள முதலிகள், ஆசார்யனை விடலாமோ, என்ன, அதையும ஆமோதித்து' "தான், சூர்ய வம்சத் தின் குலகுருவான வசிஷ்டர், நீஙகள் அந்த ஸபையில் விளஙகும் பாகவதர்கள்" என்ருர்

இதைக்கேட்டு ஆளவந்தார் விஸமிதரானுர் இது விஷயத்தில் ஈசாண்டான் அருளிச் செய்த ச்லோக மாவது—

"कावेरी सरयू सरित् शुभगुणं रंगं ह्ययोध्या तयो-
नाथो रंगपति विधेः कुलमिदं चैकं स्वयं यामुनः ।

श्रीमान् पंक्तिरथोऽस्य ते च तनयाश्चत्वार एतद्गुरु
रामोब्रह्मसुतर्षिरत्र सुधियो ब्रह्मर्षिराजर्षयः ॥"

## சொட்டை நம்பி

ஸ்ரீ ஆளவந்தார் திருக்குமாரர்களான சொட்டை நம்பியும தைய்வத்திறகு அரசு முதலியவர்களும் ஸ்ரீ ஆளவந்தார் ஸன்னதியில் ஸகல சாஸத்ரங்களையும், காலக்ஷேப க்ரந்தங்களையும அதிகரித்தார்கள் ஈச்வர முனிபட்டாழவான் என்கிற சொட்டை நம்பியின் திருக் குமாரர் நாதன் என்கிற என்னுசசான் எனனுச்சான் பிள்ளை–பிள்ளை அப்பன் பிள்ளையப்பன பிள்ளை தோழப் பர், தோழபப வம்சத்தார திருவேங்கடமுடையானுக்குத் தோழனுக ஸலலாபித்து விளஙகுகிறவர்கள்

## தைய்வத்துக்கரசு நம்பி

ஸ்ரீ ஆளவந்தார் த்விதீய குமாரரான தேவராஜன் என்கிற தையவத்திறகரசு நமபி மஹாபரமமஜ்ஞானி (விஹித விஷயத்திலும) அதிவிரகதர் பக்தி அதிகரித்து *"பேயர் என்றும பித்தர் என்றும் பிறர் கூறலானுலும் இவர் யோகநிஷ்டர்

ஒரு சமயம இவரை ஆளவநதார் ஏகாந்தத்தில் அழைத்து, "நீ இபபடி திரிகைககு சிதத-அஸவாஸ்தியம-ரோகாதிகள் ஒன்றும காணுமே இதென்னென்ன, அவரும தண்டம ஸமாபித்து தனககு ஸம்ஸாரத்தில ருசி இலலை எனறும், பகவததிஷ்டித க்ஷேத்திர-ஸேவாருசி,

*திருவாயமொழி 3-5-8

மேலிட்டிருக்கிறது என்றும, அடியேனை எலலோரும் கை விடும் படிககு, இபபடி நடிக்கிறேன், தேவரீரும் திருவுள் ளம் பறறி அனுமதி தந்தருள வேண்டும, இதை ஒருவருக் கும சொலல வேணடா, சிநதிககவும வேணடா எனன, ஸ்ரீ ஆளவநதாரும நலலது, நம குடிபபிறபபிறகு ஒத்ததே, அபபடியே செய, ஆனால, நீ தேச-சஞ்சாரியாய இருகக, உன்னுடைய பாரியை தனித்திருபபது, நியாயமாகாது அவளையும கூடடிக்கொணடு போயவா, என்று சொல்லி, சில ஸஹாயததுடன் அனுபபினார் தெயவத்திறகரசு-நமபியும் அநநிய மனபபடி ஒபபுக கொண்டு ஊரார் பரிக ஸிக்கும்படி உனமததர்போல நடித்துப புறபபட்டு ஸந்துஷடராய, வடதிசை எம-பெருமான்களை ஸேவிதது கஙகாதி-தீர்த்தமாடி, பதரிகாசரமம் வரையில சென்று மீண்டும், திருமலை வநது திருமலை-அப்பனை ஸேவித்து நிறக, அபபனும உகநது நீர் இனி சஞ்சரிக்க வேண்டா, நம்முடைய கார்யஙகளை ஆராயந்து கொண்டு வாரும், என்று நியமித்தருள இவரும அபபடியே திருமலையில பத்னீ-ஸமேதராய வஸிததுக கொண்டு கிரஹஸதா ச்ரம-நிரதராய பெருமாளுககு திருத்துழாய அபிவிருத்தி முத லான கைஙகர்யத்தில உதயுகதராய, பூர்வாகள் செயத கைஙகாயஙகளையும, மறறும இவாகளுடைய கதைகளை யும், கணடு கேடடு மிகவும உவபபுடன் வஸித்திருந்தார்

ஸ்ரீ ஆளவந்தாரும இச் செயதிகளைக் கேட்டு நம்பி லும முற்பாடனானென்று உகந்தருளினார்

இபபடி சில நாள் கழிந்தவாறே திருமலையில் அபப னும் அலர்மேல மஙகையும ஒரு வருதத-தமபதிக்ளாய தெயவததிறகரசு-நமபி திருமாளிகையில் வந்து, தெய் வத்திறகரசு அபபன் ஸநநதியில கைஙகர்ய பரராய்

இருக்கும ஸமயத்தில, அவா தேவிகள் பெருமாள் நாச்சி யாரைக் கணடு, "அமமா தாகமாய இருக்கிறது கொஞ் சம குளிாநத நீா தரவேண்டுமெனன", அவளும் ஒரு பாத்திரத்தில் கொணடு வந்து ஸமர்பிக்க, அதை இரு வரும பருகி ஆகாச-கஙகா-தீர்த்தமிலலேயோ வென்ன தேவியாரும் அது கொண்டு வந்து தர அடியேன புத்திர-' பாக்யம பெறறிலேனென்ன, தமபதிகள் அபபடிப புத்திரன் உணடாகில கொணடு வந்து தரச் சொலகிருயா வெனன, அவளும் அடியேன், பாக்யம, அப்படியே செயகிறேனெனன, தக்ஷணம அவர்கள் மறைந்து போனாகள

பெருமாள் நாச்சியாரும் ஆச்சர்யப்பட்டு இச் செயதியை தெயவத்திறகரசு-நம்பிக்கு விண்ணபபஞ் செயய, நம்பியும இதைச சிநதித்துக கொணடு கண்-வளருகையில அவா கனவில ஸ்ரீ-பூ-ஸ ஹிதராய அபபன எழுநதருளி நீா விஷய-விரக்தரே ஆகிலும் உம்முடைய பௌதர-தௌஹித்ர-முகத்தால் உபய-வேதாந்தஙகளை யும் வியாகயானிக்க உத்தேசித்திருக்கிரும மேலும உமமிடததில உமககு குமாரராக அவதரிககப போகி ரேும் நம் தேவிமாரான திருமகள் மண்மகள் இருவரும் உமக்கு குமாரிகளாக அவதரிக்க இருக்கிருர்கள், ஆனதால் க்ருஹஸத தர்மத்தை அனுஷ்டியுமென்று நியமித்தருள, நமபியும் விழித்து பகவத்ஸஙகலபம் அபபடியாகில சுபோதர்ககமே எனறு ஸந்துஷடரானுர்

## திருமலே நம்பி

பிறகு கலி 4074 ஸ்ரீமுக வருஷம புரட்டாசி மாதம சுக்லபக்ஷம் பஞ்சமி வெள்ளிக்கிழமை கூடிய அனுராதா

நக்ஷத்திரத்தில தையவததிறகரசு நமபிக்கு ஒரு குமாரர் உதயம் செயதருளினா நம்பியும் ஸசேல மஙகள ஸநான பூர்வமாக ஜாதேஷடி செயதருளி ஸ்ரீஆளவந்தார் திருவடிகளுக்கு விண்ணபபம் அனுபபினர் ஸ்ரீ ஆளவநதாரும் கேட்டருளி, "வறுத்தபயரை முளைக்க வைததாறபோல" அப்பன செயதருளிய ஸஙகல்பததிறகு உகநது சொடடை நமபி முதலானேரை அனுப்பி புணயாஹவாசனத்தன்று திருமலை அப்பனுடைய அனுக்ரஹஜாதராகையால் திருமலைநம்பி, ஸ்ரீசைல பூர்ணர் எனும திருநாமம் இடுவித்து உகந்தருளினர்

ஸ்ரீசைலபூர்ணர் எனனும் திருமலைநம்பி, அதிமேதாவி, ஏக ஸந்தகராஹி ஆனபடியால ஸர்வ சாஸதிரஙகளையும் ஸர்வக்ரந்த காலக்ஷேபங்களையும் அதித்வரையில் அதிகரித்துப் ப்ரவர்த்தகராக விளங்கினர்

திருமலைநம்பியும அவருடைய பிதாவின் ஜயேஷ்ட பராதாவின் குமாரரான என்னுச்சானும இன்னும் அநேகரும் தெயவத்திற்கரசு-நம்பியின் ஸன்னிதியில சாஸதிரார்த்தஙகளை பயின்ருாகள்

திருமலை-நமபி சிலகாலம் கழித்து கோயில் எழுந்தருளி தன் பிதாமஹரான ஆளவந்தாரிடம் உபய வேதாந்த சாஸ்த்ர காலக்ஷேபம் செய்தார் அந்த ஸமயத்தில இவருக்கு திருவேங்கட முடையானின் கைங்கர்யத்தில் அபிருசியின் அதிசயத்தை ஸ்ரீ ஆளவந்தார் கடாக்ஷித்து திருமலை அபபன் கைங்கர்யத்திற்காக அனுபபி அருளினா

பிறகு ஸ்ரீ ஆளவந்தார் காலக்ஷேப கோஷடியிலும் ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஸமூகத்திலும், "திருவேஙகட

முடையான் திருமலை நமபியைக கொண்டு தாம் நினைத்த படிககெல்லாம கைஙகர்யம கொண்டருளி தன் தோழனுக வும ஸல்லாபித்து ஆசசர்ய சேஷ்டிதங்களை நடத்தி பக்த-ஜன-வாத்சல்ய-ஸௌலபயாதிகளை பிரகாசிபபித்து வரு கிருன்" என்று அபபோதே ப்ரஸித்தமாயிற்று.

ஒரு சமயம் உடையவருக்கு ஆசார்யரும் ஸ்ரீ ஆளவந்தார் சிஷயருமான மஹாபூர்ணர் என்னும் பெரியநம்பி காலக்ஷேப கோஷ்டியில ஆளவநதாரை நோககி திருமலைநம்பி தமக்கும திருமலையில முனனேறும படியான ஹிதஙகளை உபதேசித்து மீமாம்ஸாபடடரைக் கொணடு சாஸத்ரபரிசயம் செயவித்து தாமே ஒரு சாஸத் ரத்தில கரைகாணபபணணி இத்திருவடிவாரத்தில வந்து ஆச்ரயிக்கும்படி யோக்யதை கறபிதது உதவியருளினுர் என்று கொண்டாடக்கேட்டு ஸ்ரீ ஆளவநதாரும் அவர் இவ்விடத்தில சில காலமே காலக்ஷேபாநவயத்திலிருந்து திருமலைத திருமபிச் சென்றுலும குடத்திலிட்ட விளக்கா காமல் அழகாயக் குன்றிலிடட விளக்காகத் திருமலையில் விளஙகலாயிறறு என்றும் ஸித்தாந்த நிர்வாஹததிற்கு அவர் அதிகாரி என்றும ஆமோதித்தருளினுர்.

† பகவானுக்கு மேலும நித்யமாய் ஆஜஞா அனுஜஞா கைஙகர்யஙகள், சாஸ்திர விஹிதமான யாகம் முதலிய காமாக்கள், ஆகாச கஙகா தீரத்த ஸமர்பபணம்,

---

† "आज्ञानुज्ञा विहितसुमहायज्ञतीर्थप्रदान,
अत्यन्तार्थप्रवचन पराहंकृतिक्षेपणाद्यैः ।
श्रीशैलेशं प्रियमनुपमं कुर्वतः श्रीमहीभृत्,-
पूर्णयस्य प्रथितम शृणेद्यामुनो नित्यकृत्यम् ॥"

ஸகல சாஸத்ிரங்களிலும்—பரவாததகாகளான— அந்நத ரிஷிகள் போல, தானிட்ட வழககாக நிரூபணம, வேதாந்த—பரவசனம், இதர மத நிரஸநம, நிதய—வ்யாபார நிர்வாஹம், இவை முதலியவைகளின் வைகரியால் திருமலை-நமபிகள், திருவேஙகடமுடையானுககு அதிசயிதானுகரஹ-பாத்ரரானுர் எனபதை ஆளவநதார் காலக்ஷேப கோஷ்டிகளிலும மறறும் பல முகங்களாலும் கொணடாட கேட்டு எலலோரும அதிபரீதரானுாகள்

இவருடைய திவ்ய விருத்தாந்தத்தை விமர்சித்தால் பகவானே தன ஸஙகல்பத்தால ஸ்ரீ வைகுணடத்திலிருநது நித்திய ஸூரி ஒருவரை வரவழைத்து பரம-யோகிகள் அவதரித்த இந்த வமசத்தில் திருமலை நம்பியாக அவதரிபபிதது காயிக,—வாசிக,—மானஸ ரூபங்களான தரிவிதமான கைஙகாயஙகளையும தன் திருவுள்ளத்திறகு உகப்பாக நிர்வஹித்து அவாஙமனஸ—கோசர-மகிமைபெறறு விளஙகி வருகிறுா, என்று மகா-கோஷடிகள் தோறும மிகவும் கொண்டாடுகிறுர்கள் இபபடி ஸ்ரீ ஆளவந்தார் காலகக்ஷேப கோஷடியில் இவர் குணுனுபவமே காலக்ஷேபமாய் வளாந்து போரா நின்றது இதை இந்த *ஸ்ரீகாந்த ச்லோகத்தால் விவரித்தார்கள் பெரியநமபி முதலானேர் ஸ்ரீ ஆளவநதாரை ஸ்ரீமநத நாதமுனி கோஷடியிலும் திடிமலைநமபியை

---

* "श्रीकान्त मंगलगुणानुभवोऽपि तादृक्
विच्छिद्यते न हि कदाचन हन्त येषाम् ।
श्रीशैलपूर्ण गुणवृत्त लवप्रभाव
संकीर्तन श्रवण विस्मृततत्कथास्ते ॥"

या वै ह १८

